குலத்தவரெனக் கூறுகின்றனர்: அது இவ்வாதித்தன் என்னும் பெயர் பற்றியாகுமெனத் தோன்றுவது.

## 6. கம்பர் சோழனுடன் கோபித்துக்கொண்டு மதுரைக்குப் போனது.

கம்பர் பாண்டியநாடு போய் மதுரையில் பிரவேசித்தார். பாண்டியன் இவரை உபசரித்து அரண்மனையில் வைத்திருந்தான். சில காலமானபிறகு சோழன் பெரிதும் மனம் நொந்து சடையன் தம்பியாகிய இணையாரமார்பன் என்பானைக் கம்பரைக் கூட்டிக்கொண்டு வருமாறு மதுரைக்குச் செலவிடுத்தனன். அவன்போய்க் கம்பரைக் கண்டு அளவளாவி மகிழ்ந்து தான் வந்த காரண முரைப்ப, கம்பர் இணையாரமார்பனைப் பாண்டியனிடம் அழைத்துச்சென்றார். இருவரையும் வரவேற்ற பாண்டியன் 'நும்முடன் வீற்றிருக்கும் இவன் யார்? என்ன, கம்பர் "இவன் எனக்கும் சரராமனை சடையனுக்கும் தம்பி, இணையாரமார்பன் என்னும் பெயரினன்" என்று கூறினர். இதற்கு மேற்கோள்:—

தீரம்பெரிய தென்னர்பிரான் சிங்காதனத்திற் சேர்த்தி'இவன்
ஆ'ரென்றுரைப்ப 'நம்பி இணையாரமார்பன் அடியேற்கும்
சாரும் சரராமனுக்கு மொருதம்பி' எனக்கம்பன்புகழும்
வாரும் பெருவெண்ணெயர் பெருமான் வளஞ்சேர் சோழமண்டலமே.

## 7. கம்பர் சோழனிடம் இரண்டாமுறை கோபித்துப் பிரதாபருத்திரனிடம் போனது.

கம்பர் வடக்குநோக்கிச் செல்லும்போது வழியில் சிலரைப் பாடிச் சில வரிசைகள்பெற்று ஓரங்கல் நாட்டை அடைந்தார். அருங்கலை விநோதனாகிய பிரதாபருத்திரனது அவைக்கண் எய்தித் தமது கல்வி மாட்சியால் அவ்வேந்தனையும் அவையையும் தம்வயப்படுத்தி அவ்வரசனால் நன்கு போற்றப்பட்டு இனிது ஒழுகுவாராயினர். சிலகாலம் கழிந்தபிறகு தாம் வந்த காரணத்தை எடுத்தோதி, அவ்வேந்தனுக்குச் சோழன்பால் பெருஞ்சினம் மூளச் செய்து, தமது அளவில் பேராற்றலைச் சோழன் உணருமாறு அவ்வுருத்திரனைத் தமக்கு அடைப்பைகட்டிக்கொண்டு தம்முடன் சோணாடு போத வேண்டினர். அவன் அங்ஙனமே போந்து அவரைச் சோணாட்டே முன்னரினும் சிறக்க வீற்றிருக்க வைத்துத் தன்னூர்க்கு மீண்டனன்.

PRINTED AT THE DIOCESAN PRESS, MADRAS—1926. B 10726.